உ

கடவுள் துணை.

# ஆடி நூல்



அருணாசலமுதலியாரால்

பார்வையிடப்பட்டு

கொலைனூரி

## மாணிக்கமுதலியார்

கம்பேனியாரவர்களால்

தமது

மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

---

விக்கிரம௵ பங்குனிமீ

---



உ

சிவமயம்.

# துடி நூல்.



காப்பு-வெண்பா.

ஆராயுஞ்செந்தமிழா லாயபயனெடுத்துச்
சீரார்துடிநூலைச்செப்பவே-காரார்
களத்துவிநாயகன் காத்தருளும்பூத
களத்துவிநாயகன் காப்பு.

விருத்தம்.

சீருடனே துடிக்கி லுச்சி யிடரோநீங்கும்
சிறந்தவுச்சிவலந்துடிக்கி லச்சஞ்சொல்லும்
பேருடனேவுச்சியிடம் பெருமையாகும்
பின்றலையேதுடிக்கிற் சத்துருக்களுண்டாம்
சார்புடனே தலையடங்கற் றுடிக்குமாகின்
றலைவனாற்பெருமை சம்பத்துமுண்டாம்
நேருடனேநெற்றியிடந் துடிக்குமாகின்
நேர்வார்த்தைசம்பத்து நிறையவாமே (௧)
நிறையநெற்றிவலந்துடிக்கிற் பிணியேநீங்கும்
நீண்டவலப்புருவமிகப் பெருமையாகும்

பிறையனையபுருவமிடந் துடிக்குமாகின்
பெரியதொருபொல்லாங்கு பேச்சுமுண்டாம்
குறையறவேயிருபுருவந் துடிக்குமாகின்
கோதில்மிகுபெருமைதா னெய்துமென்பார்
மறைவறுசீர்வலத்திமை மேலேயாகின்
வழக்குண்டாய்த்திருமிது வாய்மைதானே (உ)
வாய்மைவலக்கண்ணிமை மேலேயாகின்
வல்விவிசனத்தாதழுகை வந்துயாறும்
தூய்மைபெறுமுற்குவளை துடிக்குமாகின்
தொடர்ந்தவழக்கதனை நகைக்காகவெல்லும்
நீரையறப்பிற்குவளை துடிக்குமாகின்
சிறந்தபெரும் புகழுடனே செல்வமுண்டாம்
தூய்மைவலக்கண்ணிமை கீழதாகின்
துணைவனும்கேபிடறவருஞ்சொல்லுங்காலே ()
சொல்லிடக்கண்ணிமை மேலதாகின்
சுகமிகுந்தசம்பத்தாந் தொலைவிலாத
வல்லவலக்கண்ணடையத் துடிக்குமாகின்
வருத்தமுறும்பிணிசித்து வந்துமாறும்
கல்லையில்லாவிடக்கணைக் குழித் துடிக்குமாகின்
இருந்தியமிகப்பெருகு மியம்புங்காலே
அல்லலுடன் கழுத்தளவுந் துடிக்குமாகின்
அவன்சிரமங்கற்றுவிழு மறுதிதானே, (ச)

தானேவன்பிடரின் வலந்துடிக்கினன்மை
சார்ந்தவிடம்புறமாகிற் றகைமையுண்டாம்
கானகமாமுதுகுபிடராக்கமாகும்
கனைவலதுபயப்புறமே வழக்குநன்மை
ஈனமிலாதிடதுபுயப் புறமேயாகின்
எந்திழையுண்டினியவலப் புயமேமுற்றும்
ஊனமுடனொருசெய்தி தூரத்தெய்தும்
உரமிடப்புயஞ்சாவென் றுரைப்பதாமே (௫)
உரைக்கில்வலக்கண்டக்கை யடைபேறாகும்
உரவிடக்கண்டக்கை யுறுதோஷந்திரும்
தலாக்குன்மிகுதவப்பயனும் வலமுழங்கை
தாவிலிடமுழங்கைதனஞ் சாருநன்மை
பெறுக்கமுறும்பேறாகும் வலமுழங்கை
பிறர்க்கோடாமிடதுமுன்கைப் பேசுங்காலே
விரிக்குமகங்கைவலத்தே துடிக்கிலீனம்
மேவுமெனப்புலமையினோ ரியம்பினோரே (௬)
இயம்புங்கங்கையிடத்தே லாபமாகும்
இயல்புடனேவலப்புறங்கை யழுக்கதாகும்
பயமுறவேயிடப்புறங்கைத் துன்பமேவும்
பருத்தவலப்பெருவிரலி லாபமாகும்
நயம்பெறவேசுட்டுவிர லிலாபமாகும்
நடுவிரலிலேதற்கருமமெய்துமிக்க

வயம்படைத்தவணிவிரலிற் பெருமையாகும்
மறுவில் சிறுவிரலுற்றார் சேர்ந்தசாவே (௭)
சேர்ந்தவலக்கையடியே துடிக்குமாகின்
சிறந்ததொருகருமமுற்றுஞ்செல்வமுண்டாம்
நேர்ந்தவிடக்கைப்பெரிய விரலதாகின
நிறைபெருமேசுட்டுவிர விரசநோக்காம்
சார்ந்தநடுவிரலின்மிகப் பெருமையுண்டாம்
சவியிலகுமணிவிரலே சாருநன்மை
வார்ந்தசிறுவிரலாயின் மரணமில்லை
வஞ்சநமனேவுமவன்வலிமைகெட்டே (௮)
கேட்டவனதன்னிடக்கையினிற்றுடிக்குமாயின
கிலேசமுடனவனிருந்த பதியிழக்கும்
நாட்டமுறுநெஞ்சதனிற் றுடிக்குமாகின்
நலமிலாநோககாடு சாவுமெய்தும்
கூட்டமுடன்வலமுலையிற் றுடிக்கிற்சாவாம்
இடமுலையிற்பிரியமனை யனையதொப்புள்
நீட்டநிறைவிசனமாம் வயிறேயாகின்
நிதமுமொருநோய்வந்து நீங்குங்காணே (௯)
காணவலப்புறமுதுகு துடிக்குமாகின்
கரியவிடநோய்க்காட்டிக் கடிதிற்றீரும்
கோணவிலாவிடதுபுற முதுகேயாயின்
குடியிருந்தமனையகன்றே தூரத்தேகும்

நாணையமுதுகடையத் துடிக்குமாகின்
தாபமுதலாகியநோய் தணியாவென்ப
தோணவலச்செட்டையினிற் றுடிக்குமாகின்
துணிகிடைக்குப்புதிதாகத் தோன்றிப்பாரோ()
பார்த்தவிடக்கைச்செட்டைப்பிரியஞ்சொல்லும்
பரிந்திரண்டுகைச்செட்டைப்பழுதென்றோது
சேர்த்தவலமூக்கடையத் துடிக்குமாகின் [ம்
செல்வமுறுய்லாபம் பலசம்பத்துண்டாம்
ஏர்த்தவிடமூக்கடையத் துடிக்கிற்செல்வம்
எய்துமிகழ்மேற்றுடிக்கி லினியவார்த்தை
போர்த்தகீழுதடுதனிற் றுடிக்குமாகின்
புதியதின்பண்டங்கள் பொருந்துமெல்ல (௰௧)
மெல்லவலவிலாத்துடிக்கில் விசனமாகும்
மிகுந்திடவேவிலாத்துடிக்கில் வீடிழக்கும்
வல்லவலத்திசையாகிற் பொருளேசேரும்
வருபயணப்போதலுறுந் தயவுநன்மை
மல்லலுறுந்திசையிரண்டுந் துடிக்குமாகின்
வருந்தியநோய்திருமலர் வின்பமாகும்
அல்லலும்போமதிபார வினையுந்திரும்
அறிந்தவராற்கைப்பொருளும் விரயமாமே ()
விரைவாகவிடைதுடிக்கில் வேள்விசெய்யும்
மிகப்பேருண்டாகு மேவுங்காலே

அரையிலேகோசமது துடிக்குமாகில்
அருவிசனர் தூரத்தாராலேயாகும்
வரையிற்கீழ்க்கோசமது துடிக்கிறன்மை
வல்லிலைகயேகரிகுதிரை யேறுமெனனும்
திரைவிடவிரைதுடிக்கி னோயேதீரும்
னேரிரண்டுந்துடிக்கில் வழக்கெய்துந்தானே )
எய்தியதோர்வலத்தொடையிற்றுடிக்குமாகில்
இயல்பலாதொருவழக்குண்டாகமவலனும்
செய்திடத்தொடையினியவார்த்தையாகும்
சிறந்ததொடையிரண்டினுஞ் செம்பொன்களுக
ண்டாம்,நொய்துவலமுழந்தாளிற்கோபமுண்டா
ம்,நோககிலிடமுழந்தாளிறபந்துசேரும்
திய்யமொழிமைந்தர்முழந் தாளிரண்டிற்
செகமாளுமென்பரிசைப் புலவர்தானே (௰௪)
புலவரிசைப்பார்வலக்கால் கணைடையாகின்
பொருந்துநல்லடிமைதாம் பொருவிலாக
வலதுகணைக்கால்துடிக்கிற் சப்பத்துண்டாம்
வளரிடதுகணைக்காலிற் சாவின்வார்த்தை
இலயிலாவிடக்காலின் கணைடையாகின்
கிலேசமுறும்பெறுநோயுங் கிளறுமொய்ப
நலமுடனேயிரண்டுகணைக்கால்துடிக்கின்
நமக்குமுடனேட்டந்தா னயந்துகூறே (௰௫)

கூறுவலப்புலவடியிற்றுடிக்குநோயாம்
கோதிலிடப்புறவடியேவழக்காய்வெல்லும்
ஊறும்வலதுள்ளங்கால்பொருள்கைகூடும்
ஊன்றுமிடதுள்ளங்கால் பிணியாய்மீளும்
காறுமணிகபுறக்கணைக்கால் சிவிகையேறும்
கால்விரலிலாந்ததனிற்றுடிக்குமாகின்
நாறுமலர்த்திருமகளுஞ்சேரும்வேணை
நன்மையுமுண்டாம்வாழ்வுநற்சீராமே (௰௯)

முற்றிற்று.

இந்நூலாசிரியர்.

மன்னன்விக்கிரமாதித்தன்சொல்வழிப்
பன்னிரண்டொருநால்விருத்தப்பாவில்
துன்னுசீர்த்துடிநூலைத்தொகுத்தனன்
நன்னிலப்புகழிராமநாதன்றானே